[11th August 1960

வதும், அதை சபாநாயகர் அனுமதிப்பது என்று சொன்னால், எங்களுக்கும் தெரியும், அதே போல காங்கிரஸ் கட்சியைப்பற்றி மோசமாக நாங்களும் சொல்லலாம். ஆகையினாலே இதை தயவு செய்து அங்கத்தினர் வாபஸ் வாங்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

MR. SPEAKER : அது அவர்களுடைய அபிப்பிராயம். அந்த அபிப்பிராயத்தை நான் எப்படி நிறுத்த முடியும்? நீங்களும் உங்கள் அபிப்பிராயத்தைச் சொல்லலாம். நீங்களும் கேள்வி கேளுங்கள்.

SRI V. K. KOTHANDARAMAN : அதை கனம் அங்கத்தினர் வாபஸ் வாங்கவேண்டும். நாங்களும் அதைப் போல வார்த்தைகளை உபயோகப்படுத்தலாமா ?

SRI M. P. SARATHI : கம்யூனிஸ்டுகள் தொந்தரவால் நெல்லைப் போடமுடியவில்லை என்று சொல்லுவது, கம்யூனிஸ்டுகள் கொள்ளை அடிக்கிறார்கள் என்று குற்றச்சாட்டு சொல்வது போல் ஆகாதா ? வேறு அதற்கு என்ன பொருள் ?

MR. SPEAKER : அப்படி அவர்கள் சொல்லவில்லை. நீங்கள் சொல்லுகிறீர்கள். (சிரிப்பு.)

SRI V. K. KOTHANDARAMAN : கனம் அங்கத்தினர் வேதரத்னம் அவர்கள் மறைமுகமாகச் சொன்னதை ஸ்ரீ சாரதி அவர்கள் அர்த்தத்தோடு விளக்கிச் சொல்லுகிறார்கள். ஆகையால் அதை கனம் அங்கத்தினர் ஸ்ரீ வேதரத்னம் அவர்கள் வாபஸ் வாங்கவேண்டுமென்று கனம் சபாநாயகர் அவர்கள் உத்தரவு போடவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

MR. SPEAKER : அது 'அன்பார்லிமெண்டரி' என்று சொல்ல முடியாது. ஆகையால் அதை வாபஸ் வாங்கவேண்டுமென்று சொல்ல முடியாது. விதிகளை மீறிப் பேசினால் அப்போது 'பாயிண்டு ஆப் ஆர்டர்' கொண்டுவந்தால், அதை நிறுத்தலாம்.

SRI A. GOVINDASAMY : தென் ஆற்காடு ஜில்லாவில் எந்த இடத்தில் 'கோடவுன்' ஏற்படுத்தப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கடலூரில்.

*Poramboke lands in Voimedu village*

* 104 Q.—SRI A. VEDARATHNAM : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வாய்மேடு கிராமத்தில் உள்ள புறம்போக்கு நிலம் எவ்வளவு ?

(ஆ) இது சர்வே ஆகிவிட்டதா ? எப்போது ?

11th August 1960]

(இ) இந்த நிலத்தை நிலமற்ற விவசாயிகளுக்குப் பிரித்துக் கொடுக்க சர்க்கார் உத்தரவு பிறப்பித்திருக்கிறார்களா? எப்போது?

(ஈ) எப்போது இது அமுலுக்கு வரும்?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) and (b) Presumably the hon. Members refers only to Government lands which are normally surveyed for assignment and not to all communal porambokes. The extent of swamp poramboke lands in Voimedu village that could be surveyed with a view to their being assigned to landless poor persons was computed as 2,516.53 acres. The survey of the lands was completed on 11th June 1959.

(c) In 1953, the Government ordered that the waste blocks of lands available for assignment in Voimedu, among other villages in Tiruthuraipoondi taluk, Thanjavur district, be granted in favour of deserving landless poor persons individually free of land revenue at 2 acres for each family.

(d) The Collector has sanctioned proposals for transfer of classification of the lands to be assigned and has issued instructions to push through the assignment. The work is expected to be completed soon.

SRI A. VEDARATHNAM : 1953-ம் வருஷத்தில் உத்தரவு போடப்பட்டும் 7 வருஷ காலமாக தாமதப்பட்டிருக்கிறது. மிராசுதாரர்களிடத்திலிருந்து நிலங்களையெல்லாம் எடுத்து நிலம் இல்லாதவர்களுக்குக் கொடுக்க வேண்டுமென்று அரசாங்கம் முன் வந்திருக்கிற காலத்தில் அரசாங்கத்தினிடமிருக்கும் இவ்வளவு விஸ்தீரண நிலத்தை, 2,500 எக்கரை, நிலம் இல்லாதவர்களுக்குப் பிரித்துக் கொடுக்க ஏன் இவ்வளவு தாமதம்? இந்த ஆண்டு சாகுபடிக்கே அது பயன்படும்படியாக அதைப் பிரித்துக் கொடுக்க சர்க்கார் முன்வருமா?

THE HON. SRI M. A. MANICKAVELU : கடந்ததெல்லாம் போகட்டும். இப்பொழுது ரொம்பவும் துரிதமாகக் கொடுப்பதற்கு ஏற்பாடு ஆகியிருக்கிறது. நானும் அதை நேரில் போய் பார்த்தேன். ஆகையினால் அநேகமாக அதெல்லாம் இந்த வருஷத்தில் செய்யப்படும்.

*Kilpallipattu Dalavai Tank*

* 105 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் பெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு மாவட்டம், ஆரணி தாலூகா, கீழ்ப் பள்ளிப்பட்டு தளவாய் ஏரியைப் பழுது பார்க்கவேண்டுமென்று கோரி 3—12—59-ல் பொது மக்களிடமிருந்து மகஜர் வந்ததா?

(ஆ) அப்படியானால், அதன்மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU :

(a) Yes, Sir.